இம் மத்திம லோகத்திலிராநின்ற வியந்தரஜோதிஷ்கதேவர்கள், எண்டிசையும் - எட்டுத்திக்குகளிலும், ஈண்டினர் - நெருங்கினர்கள், முகை - கூட்டமாக, மலர் - புஷ்பங்களை, சொரிந்து - பொழிந்து, மேலவர்கள் - கல்பவாஸிதேவர்கள், மூடினர் - வந்து மூடினர்கள், இகல் - கருமங்களின் பராக்கிரமத்தை, ஒறுத்தவன் - தண்டித்துக் குறைத்து நீக்கின சஞ்சயந்த பட்டாரகன், செப்பின்மணியை - செப்புக்குள்ளிராநின்ற இரத்தினத்தை, ஒத்தனன் - நிகர்த்தான், எ - று. (கூக)

வேறு.

172 தாம நான்றன சந்தன மெழுகின சருபலத் தான்வந்த
தூம மார்ந்தன சுடர்விளக் கெரிந்தன சொரிந்தன மலர்மாரி
வாம வாரியின் வால்வளை யரிசியின் மங்கையர் நடமுன்னுக் [தார்.
காம வேளைவென் றிருந்தவ னிருந்தடி பணிந்துடன் றுதிசெய்

(இ - ள்) (அவர்களெல்லோரும் வந்து கூடியபின் சஞ்சயந்த பட்டாரகர் இருந்த ஸ்தானத்தில்) தாமம்நான்றன - (மேலிடங்களெல்லாம்) பூமாலை முதலிய மாலைகள் தொங்கவிடப்பட்டன, சந்தனம் - சந்தனக்குழம்பால், மெழுகின - கீழிடங்களெல்லாம் மெழுகப்பட்டன, சரு - (தேவநிர்மிதமாகிய அல்லது நிர்மாபணமாகிய) பலகாரவகைகளோடும், பலத்தான் - பழவகைகளோடும், வந்த - வரப்பட்ட, தூமம் - அகில்தூபங்களும், ஆர்ந்தன - நிறைந்தன, சுடர் - பிரகாசியாநின்ற, விளக்கு- இரத்தின தீபம் முதலியவைகளும், எரிந்தன - பிரகாசித்தன, மலர்மாரி - புஷ்ப வருஷங்கள், சொரிந்தன - பொழியப்பட்டன, வாரியின் - ஸமுத்திரத்திலுண்கிய, வாமம் - அழகிய, வளை - சங்கின் வர்ணம்போல், வால் - வெளுப்பாகிய, அரிசியின் - அக்ஷதை அரிசிகளையுடைய (அதாவது: அக்ஷதைகளால் அர்ச்சிக்கின்ற), மங்கையர் - தேவரம்பையரின், நடம்முன்னு - நர்த்தனத்துக்கெதிரில், காமவேளை - மன்மதனை (அதாவது: மோஹநீய கருமத்தை), வென்று - ஜெயித்து, இருந்தவன் - இராநின்ற வீதராகனுகிய சஞ்சயந்த பட்டாரகனுடைய, திருந்து - திருத்தமாகிய, அடி - பாதங்களை, பணிந்து - வணங்கி, உடன் - ஒரு தன்மையாக (அதாவது: ஒற்றுமையாக), துதி - ஸ்தோத்திரங்களை, செய்தார் - (எல்லோரும் கீழ்வருமாறு) செய்தார்கள், எ - று.

"வாமவாரியின் வால்வளை யரியினமங்கையர் நடமுன்னு" எனக்கொண்டு "வெள்ளிய சங்கு வளையலையும் பாதச்சிலம்புகளையு மணிந்த மங்கையர் நடனத்தின் முன்பாக" என்று பொருள்கொள்ளினு மமையும். (கூஉ)

173. விதிக ணன்கையுங் கடந்தனை யடைந்தனை
விகலமி லொரு நான்மை